# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்            நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்-
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3  விளைச்சல் : 29  திருவள்ளுவர் ஆண்டு  2053   அக்டோபர் –2022

## உள்ளே...
















# வேளாண்மைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Abscission | – | உதிர்தல் |
| Adhesion | – | ஒட்டிணைவு |
| Apical dominance | – | முகட்டு மேலாண்மை |
| Ascent of sap | – | சாறேற்றம் |
| Callus | – | பசைக்கூடு |
| Carrier protein | – | தாங்கிப்புரதம் |
| Caulogenesis | – | தளிர் உருவாக்கம் |
| Cloning vector | – | மரபணு ஏந்தி |
| Cohesion | – | கூட்டிணைவு |
| Drought resistance | – | வறட்சி எதிர்ப்பு |
| Drought tolerance | – | வறட்சித் தாங்குதல் |
| Ephemerals | – | குறுங்காலப் பயிரிகள் |
| Foliar application | – | இலைவழித் தெளிப்பு |

| | | |
|---|---|---|
| Gene flow | – | மரபணு பொழிதல் |
| Gene mapping | – | மரபணு வரைபடம் |
| Long day plants | – | நெடுங்காலப் பயிரிகள் |
| Micropropagation | – | நுண் பரப்புதல் |
| Molecular biology | – | மூலக்கூறு உயிரியியல் |
| Organogenesis | – | உறுப்புருவாக்கம் |
| Restriction enzyme | – | தடைக்கட்டு நொதி |
| Rhizogenesis | – | வேர் உருவாக்கம் |
| Sterilization | – | நுண்ணுயிர் அழிப்பு |
| Suspension culture | – | தொங்கு வளர்ப்பு |
| Tissue culture | – | இழைம வளர்ப்பு |
| Soil Sensor | – | மண் உணரி |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 (புரட்டாசி)
**அக்டோபர்** – 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே.கார்த்திக்**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com


ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# பெற்ற மொழி இருக்க மற்ற மொழி எதற்கு?

மொழி பண்பாட்டின் விதி என்பர். மாந்த இனத்தின் அடையாளம் மொழி. தாயிடமிருந்து கற்கும் மொழி தாய்மொழி. தாயாக நம்மைக் காக்கும் மொழி தாய்மொழி. அறிவின் வளர்ச்சியும் ஒவ்வொரு துறையின் வளர்ச்சியும் தாய் மொழியால் மட்டுமே சாத்தியம். மக்களால் பேசப்படாத மொழி இறந்து போகிறது. உலகில் இரு திங்களுக்கு ஒரு மொழி எனப் பலமொழிகள் வழக்கிழந்து அழிந்து போவதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இதற்குக் காரணம் மொழியின் உயிர்ப்பு என்பது மக்கள் பயன்பாட்டில் தான் உள்ளது.

நோபல் பரிசு பெற்ற தாகூர் கீதாஞ்சலியைத் தம் தாய் மொழியான வங்கமொழியில் தான் எழுதினார். தேசத்தந்தை காந்தியடிகள் தம் சுயசரிதையைத் தன் தாய்மொழியான குஜராத்தியில் தான் எழுதினார். "என்றுமுள தென்தமிழ்" என்றார் கவிச்சக்கரவர்த்தி. "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்" என்றார் மகாகவி. எத்திசையும் எங்கும் புகழ் பரப்பும் நம் தாய்மொழியாம் அன்னைத் தமிழைப் பேசும்போது கிடைக்கும் பேரின்பம் அளப்பரியது. இவ்வுலகில் வாழும் உயிரினங்களிலேயே மொழியைப் பயன்படுத்தும் ஒரே உயிரினம் மாந்த இனம் மட்டுமே. அங்ஙனம் இருக்க அன்னை மொழியை விடுத்து அயல் மொழியைப் பயன்படுத்துவது என்பது எவ்விதத்தில் முறை ஆகும்? பிற மொழிகளின் மீதான மோகம், கலாச்சார மாற்றம், வெளிநாடுகளில் வேலை எனப் பல்வேறு காரணங்களால் தாய்மொழியாம் தமிழ்மொழியின் புறக்கணிப்பு அதிகரித்துள்ளது. அதைப் போக்கவும் சரியாக்கவும் அனைவரும் முயல வேண்டும்.

தாய்மொழி கண் போன்றது ; பிற மொழிகள் கண்கள் மீது அணியும் கண்ணாடி போன்றவை. கண்பார்வையே இல்லாமல் கண்ணாடி அணிவதால் என்ன பயன்? நம் முன்னோரும் மூத்தோரும் பிற மொழிகளையும் கற்றுத் தேர் என்றே கூறினர். கற்றுத் தேர்ந்து தாய்மொழி பேசும் போது பிற மொழி கலக்காதே ; பிற மொழி பேசும் போது தாய்மொழி கலக்காதே என்றனர். இவ்விதம் ஒரு மொழியுடன் வேறு வேறொரு மொழியையும் சேர்க்கும் மொழிக் கலப்பு உண்மையில் அதை அழிவுப் பாதைக்கு இட்டுச் செல்கிறது. தேவையில்லாமல் வரையறையின்றித் தாராளமாக அயல்மொழிக் கலப்பு இன்று நடந்து கொண்டிருக்கிறது.

மொழிக்கான தனித்தன்மைகளை உணர வேண்டும். சான்றாக, தமிழில் மனம் குளிர வரவேற்கிறோம் என்ற சொற்றொடரை ஆங்கிலத்தில் Warm Welcome எனும்போது மண்ணுக்கேற்ற மரபும், அதனையொட்டி சொல்லும் பொருளும் மாறுபடுவதை உணரமுடிகிறது. தொன்மைத் தமிழில் பிறமொழிச் சொற்கள் மெல்ல மெல்ல நுழைந்து தமிழோடு பிணைந்து தமிழர்கள் அன்றாடம் பயன்படுத்தும் சொற்களாகி, பின் அவை நின்று தமிழ்ச்சொற்கள் வழக்கிழந்தன. தமிழுக்குத் தகை சேர்க்க பாடுபட்ட புலவர்களையும் அரசர்களையும் தமிழ்ச் சான்றோர்களையும் ஒருமுறை எண்ணிப் பார்த்தால் கூட நம்மிடம் இப்பிழை ஏற்படாது; தனித் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவோம்.

### வழக்கொழிந்த தமிழ்ச் சொற்களில் சில:

உஞற்றல்– செய்தல்

மடி –சோம்பல்

அணிகம் –வாகனம்

இரப்போன் – பிச்சைக்காரன்

இயவன் –வாத்தியக்காரன்

ஆரோசை– ஆரோகணம்

அமரோசை –அமரோகணம்

ஊட்டுப்புரை – அன்னசத்திரம்

கண்ணெச்சில் – கண்திருஷ்டி

கூலம்– தானியம்

பலகணி – சன்னல்

மதவலி – பயில்வான்

வலவன் – சாரதி

மன்பதை – சமுதாயம்

மீகான்–மாலுமி

இதுபோல் ஆயிரம் ஆயிரம் சொற்கள் இலக்கியங்களில் இருந்தும் இயல்பில் இல்லாததால் அச்சொற்கள் காணாமல் போயின. பல தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்தமை அயலாரால் புகுத்தப் பெற்ற பிறமொழிச் சொற்களின் விளைவாகும். எனினும் பழஞ்சொற்களைப் பெய்தல் தமிழர் கடனாகும். தமிழ்மொழி விண்ணில் இருந்து வந்ததன்று; அது மண்ணில் முகிழ்த்தது. மனித சமுதாயம் தமக்குத் தாமே உருவாக்கிய பெரும் முயற்சி. பேசினாலும் கேட்டாலும் இனிக்கின்ற நன்மொழி நம் தமிழ்மொழி.

"தமிழ் ஒரு முதுமொழி. அதனை அது வளர்ந்துவந்த இயற்கைப்படி வளர்க்க வேண்டும். பல மொழிகள் ஞாலத்திடை தோன்றுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றி வளர்ந்து இலக்கண இலக்கியங்களைக் கண்ட செம்மொழியாதலானும், ஒரு குடும்பத்துக்கு ஒரு மகவு போல் உடன் பயில் மொழி யாதுமின்றித் தனித்து ஓடியாடி வளர்ந்திட்ட செல்வமொழியாதலானும் அதனை தன்னிச்சைப்படி வளர்ப்பதுவே நெறி"

– அறிஞர் வ.சுப. மாணிக்கம்.

தொல்காப்பியப் பெருந்தகையின் காலத்திலேயே தமிழ் மொழியில் பிறமொழிச் சொற்கலப்பு இருந்தது. அது கண்டு மனம் நொந்து அவர் இலக்கணச் சட்டம் வகுத்தார்.

"வடசொற்கிளவி வடவெழுத் தொரீஇ

எழுத்தோடு புணர்ந்த சொல்லாகுமே"

என்று பிற மொழிக்கலப்புக்கு அணை போட்டுத் தடுத்தார்.

"அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும் ஆவுதி நறும்புகை முனைஇ "

பட்டினப்பாலை 54– 55

இப்படி இலக்கண வரம்பு கடவாக் கன்னித்தமிழ் மாற்று மொழிகளின் தாக்குதலாலும், வேற்றவர் ஆட்சியின் மாற்றத்தாலும் பல்வேறு இன்னல்களை அடைந்தாலும் தமிழ்மொழி தனக்கே உரிய தமிழ்ச்சொற்களைக் கொண்டு தனித்துவம் பெற்று விளங்குகிறது. தமிழ் தன்னிடத்தில் கலந்துள்ள வட சொற்களில் பெரும்பகுதியை நீக்க ஒல்லும். அவ்வாறு நீக்கிய தமிழ் தூய்மையும் அழகும் பொலிய விளங்கும். ஆனால் ஆங்கிலமோ இலத்தீன் சொற்களை விட்டொலித்தால் தனித்து இயங்க இயலாது.

## மேனாட்டறிஞர் கால்டுவெல்

பிறமொழிச் சொற்கள் தமிழில் கலப்பதால் சொல் வளம் மிகுதியாகும் என்பவர்கள் தான் மொழிக்கு புற்றுநோய் போன்றவர்கள். தமிழில் தரமான நல்ல பொருட்செறிவுடைய சொற்கள் அழிவதை இவர்கள் அறிவதில்லை.

சந்தோசம் என்ற சொல்லைப் பயன்படுத்தும் போது நம் மொழிக்குச் சொல்வளம் கூடியது என நாம் எண்ண முடியாது. இந்த ஒற்றைச் சொல் மகிழ்ச்சி, இன்பம், களிப்பு என்ற மூன்று சொற்களையும் தின்று ஏப்பமிட்டதை நாம் உணர்தல் வேண்டும். ஒரு சொல்லை ஏற்காமல் இருந்திருந்தால் மூன்று சொற்களை நாம் இழக்காமல் இருந்திருப்போம். இந்த நிலை இனியும் நீடிக்கக் கூடாது.

"நகுமாறு நந்தமிழை நலிவு செய்யும்

தீயர்களோ? நல்வாழ்வுக்கோர்

புகும் ஆறு புறக்கணித்தும் தமிழ் உயிர்

வாழ்வதிலும் இறத்தல் நன்றே "

– பாரதிதாசனார்

வேற்று மொழிச் சொற்களை வலிந்து நுழைத்தால் தமிழ் நலிந்து போதல் திண்ணம். ஒரு மொழியில் இல்லாத கருத்துகளைப் பிற மொழிகளினின்றும் ஏற்றுக்கொள்ளுதல் இயல்பு. அவ்விதம் ஏற்கும் போது தம் மொழி மரபறிந்து ஏற்க வேண்டும் ; புகுத்துதல் என்பது கூடாது. தொல்காப்பியர் வகுத்த வண்டமிழ் நெறிகளைப் போற்றி வளர்க்க வேண்டும். பிறமொழிச் சொற்களைக் கடன் பெறுதலால் ஏற்படும் ஐயங்களுக்குத் தெளிவு கூறும்." பாரதிதாசனார்.

"தனித்தமிழில் இந்நாட்டுத் தக்க புதுக்
காப்பியம் நன்னூல் இயற்ற

நினைப்பாரேல் நம் புலவர் நிலவாவோ
ஆயிரம் நூல் தமிழகத்தே".

பிற மொழிச் சொற்களின் கலப்பினால் தமிழுக்கு ஏற்படும் கேடுகளை அறிந்து அருந்தமிழின் தூய்மை நலம் காக்க பாடுபட வேண்டும் என்கிறார்.

தமிழன் பேசிப் பேசிக் கெட்டான் என்ற கூற்று தவறு. எதைப் பேசி தமிழன் கெட்டான்? தமிழ்மொழியின் சிறப்பு பற்றி பேசிக் கெட்டானா? தமிழ்மொழி வரலாறு பேசிக் கெட்டானா? தமிழ் மரபு பற்றி பேசிக் கெட்டானா? தமிழர் வாழ்வியல் பற்றி பேசிக் கெட்டானா? தமிழர் நூல்கள் பற்றி பேசிக் கெட்டானா? கலைகள் பற்றி பேசிக் கெட்டானா? தமிழர் வீரம், அறிவு, அறம் பற்றி பேசிக் கெட்டானா? இதில் எதையுமே இரண்டாயிரம் ஆண்டுகளாய்ப் பேசாமல் இருந்ததால் கெட்டான். இதுதான் உண்மை.

உலகில் அனைத்து இனத்தவரும் தம் மொழி, கலை, பண்பாடு எனத் தூக்கிப் பிடித்த நிலையில் நாம் நம் தாய்மொழியைக் காத்தல் தலையாயக் கடன். தமிழர் தம் அடையாளமாய்த் திகழும் தமிழ்மொழியைப் பிள்ளைகளுக்கு, இளம் தலைமுறையினருக்குக் கற்றுக் கொடுப்போம். பாஸ் பண்ணி, திங்க் பண்ணி, வாக் பண்ணி, ஸ்டடி பண்ணி... என்று இரு மொழிகளையும் அழிக்காமல் உயிரோடு உணர்வோடு கலந்த நம் தாய்மொழியாம் தமிழ்மொழியை அதன் தனித்தன்மையுடன் காப்போம். அன்னைத் தமிழில் அளவளாவுவோம்.

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பன்னாட்டுச் செயற்கைமொழி எஸ்பெறென்ரோ" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், அறிஞர் ஹெலன் ஃபிரேசர் அவர்களின் "Electropalatographic Characteristics of Some Tamil Consonants" என்னும் ஆங்கிலக் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்புநன்றியை உரித்தாக்குகிறேன். தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...



நீலகிரி மாவட்டத்தின் நெலிகோலு அறக்கட்டளை தொகுத்துள்ள படகு-தமிழ்-ஆங்கிலம் மும்மொழி அகராதியை சென்னை தலைமை செயலகத்தில் தமிழக முதல்வர் மு.க.ஸ்டாலின் வெளியிட்டார். இந் நிகழ்வில், வனத்துறை அமைச்சர் கா.ராமசந்திரன், தலைமை செயலாளர் வெ.இறையன்பு, முன்னாள் கூடுதல் தலைமை செயலாளர் சுந்தரதேவன், மொழியியல் அறிஞர் மற்றும் முன்னாள் அகரமுதலித் தொகுப்பாளர் முனைவர் ஆல்துரை, சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர் சிவக்குமார், முனைவர் பூங்குன்றன் மற்றும் அறக்கட்டளை நிர்வாகிகள் உடனிருந்தனர்.

# பன்னாட்டுச் செயற்கை மொழி எஸ்பெறென்ரோ



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



**லுட்விக் லஜாரஸ் ஜமென்ஹோஃப்**

யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல்
இனிதாவ தெங்கும் காணோம். –பாரதியார்

பாரிலுள்ள மொழிகளிலே எஸ்பெறென்ரோ மொழி போல்
எளிதான தெங்கும் காணோம். – எஸ்பெறென்ரோ கற்பவர்

உலகத்தில் பல மொழிகள் பேசப்படுகின்றன. இந்த மொழிகளில் வித்தியாசமான, விநோதமான ஒரு மொழி எஸ்பறென்ரோ. நாடுகளால், மொழிகளால், பண்பாடுகளால் வேறுபட்ட மக்கள் பழகுவதற்கும் யுத்தம், பூசலின்றி நல்லுறவு கொள்வதற்கும் உலகில் உள்ள பாரம்பரிய மொழிகள் பலனளிக்கவில்லை. இப்படியான ஓர் உயரிய, நல்ல நோக்கத்திற்காக, மொழி ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் நடுநிலையான உலகப்பொது மொழி இருத்தல் பயனாக இருக்கும் என்கின்ற நல்லெண்ண அடிப்படையில் ஒரு சில செயற்கை மொழிகள் சில மொழியறிஞர்களினால் பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளின் காலப் பகுதிகளில் உருவாக்கப்பட்டன. அவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட அந்தச் சில செயற்கை மொழிகளில் தலையெடுத்து வளர்ந்து இலங்கும் நம்பிக்கை மொழிதான் எஸ்பெறென்ரோ.

ஒரே மொழியைப் பேசுகின்ற மக்களுக்கிடையே கூட நூறு வீத பரஸ்பர உணர்வும் ஒட்டுறவும் உலவுவது கடினமானதாகவே இருக்கின்ற போது, வெவ்வேறு மொழிகளைக் கதைக்கின்ற, வெவ்வேறு இன மக்களிடம் சரியான ஒரு புரிந்துணர்வும் சிநேகித உணர்வும் நிலவுவது சாத்தியமானதா? ஆம்! சாத்தியமானது! என்பதற்குச் செயற்கரியதாக இயற்றப்பட்ட மொழிதான் எஸ்பெறென்ரோ(Esperanto). எஸ்பெறென்ரோ என்பது மொழியமைப்பில் செயற்கை மொழி. நோக்கத்தில் பன்னாட்டு மொழி (Lingva internacia). மொழிகளால் வேறுபட்டவர்கள் கருத்துப் பரிமாறுவதற்கு ஏற்ற துணை மொழி, கற்பதற்கு எளிமையான மொழி மட்டுமல்ல ஓர் வேடிக்கையான மொழியும் கூட!

**செயற்கை மொழிகள் சிலவும் அவற்றின் உருவாக்குனர்களும்**

| மொழி | உருவாக்குனர் | ஆண்டு |
|---|---|---|
| Volapük | Johann Martin Schleyer | 1880 |
| Lingvo Internacia | Ludwig Lazarus Zamenhof | 1887 |
| Idiom Neutral | V.K.Rosenberger | 1902 |
| Novial | Otto Jespersen | 1928 |
| Interglossa | Lancelot Hogben | 1943 |
| Interlingua | International Auxiliary Language Association | 1951 |
| Glossa | W.Ashby. R.Clark | 1981 |

மனிதர்கள் பெரும்பாலும் பேசும் மொழிகளின் பெயரால் இனப்பெயர் சூட்டப்படுகிறார்கள். தமிழ் பேசுபவர்கள் தமிழர்கள், சீனம் பேசுபவர்கள் சீனர்கள், ஜேர்மன் பேசுபவர்கள் ஜேர்மனியர்கள். ஒருகாலத்தில் ஆங்கிலேயர்தான் ஆங்கிலம் பேசினார்கள். ஆங்கிலேயரின் காலனித்துவத்தினாலும் குடிப்பரம்பலினாலும் வர்த்தகத் தொடர்புகளினாலும் மக்களின் பன்னாட்டு உறவுகளினாலும் அமெரிக்காவின் பலத்தாலும் ஆங்கிலம் உலகமொழியாகி (World Language) விசாலமான நிலையில் திகழுகிறது. இக்காலத்தில் இம்மொழி கற்பது என்பது தவிர்க்கப்பட முடியாத ஓர் நிகழ்வு ஆகிவிட்டது. இதனால் ஆங்கிலம் பேசுபவர்கள் எல்லோரும் ஆங்கிலேயர்கள் ஆகிவிடமாட்டார்கள். ஆனால் எஸ்பெறன்ரோ போன்ற செயற்கைமொழிகள் பேசுபவர்கள் அவ்வாறு மொழியின் பெயரால் இனப்பெயர்கொண்டு அழைக்கப்படுவதில்லை. இம்மொழி கற்கப்படவேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. இதை எந்த நாடும் உரிமை கொண்டாட முடியாது. எவரும் தமக்குத் தான் சொந்தம் என்று மல்லுக்கட்ட முடியாது. இது அனைவரும் கற்கக்கூடிய மொழி. வழமையான மொழிகளுக்குரிய மொழிக் குடும்பம், கடும் இலக்கண விதிகள், விதிவிலக்குகள் போன்ற சிக்கல் இல்லாத மொழி. பன்னாட்டுச் செயற்கைமொழி என்பது இலகுவான மொழியாக அமையவேண்டும். அவ்வாறான ஒன்றை உருவாக்குவது என்பது சில குறிப்பிட்ட இலட்சியத் தன்மைகளைக் கொண்டு கட்டப்பட்டிருக்கவேண்டும்.

**செயற்கை மொழியின் இலட்சியத்தன்மைகள்:**

அ) கற்பதற்கு இலகுவானதாக இருக்கவேண்டும்.
ஆ) தாய்மொழிகளுடன் தொடர்புடையதாய் இருக்கவேண்டும்.
இ) மக்களின் சாதாரண தேவைகளான விஞ்ஞானம், மதம், வர்த்தகம், அரசியல், விளையாட்டு போன்றவற்றைப் பூர்த்தி செய்வதோடல்லாமல் பன்னாட்டுத் தொடர்பு ஊடகங்களான தொலைபேசி, தந்தி, வானொலி, தொலைக்காட்சி முதலானவற்றுக்கும் பயனுள்ளதாக இருக்கவேண்டும்.
ஈ) பொதுமொழியாக அமையவேண்டும். வட்டார வழக்கோ அல்லது பிரதேச மொழியோ இருக்கக் கூடாது.
உ) எல்லா நாடுகளாலும் ஏற்றுக்கொள்ளத்தக்கவாறு, அரசியற் சார்போ மொழிச் சார்போ இல்லாமல் நடுநிலையானதாக இருக்கவேண்டும்.
ஊ) மொழியின் கட்டமைப்புச் சீரானதாகவும் தர்க்கரீதியானதாகவும், பகுத்தறிவானதாகவும், தத்துவரீதியானதாகவும், தெளிவானதாகவும் இருக்கவேண்டும்.

இந்த மொழி போலந்து நாட்டு கண்மருத்துவரான லுட்விக் லஜாரஸ் ஜமென்ஹோஃப் (Ludwing Lazarus Zamenhof) என்பவரால் 1887 இல் அறிமுகப்படுத்தப்பட்டது. இம்மொழியினை அறிமுகம் செய்த போது ஓர் "சர்வதேச மொழி" Lingva internacia என நாமம் கொடுத்திருந்தார். தனது சொந்தப் பெயரைக் குறிப்பிடாது " நம்பிக்கை உள்ள டாக்டர்" – Doctro Esperanto எனும் புனைபெயரிலேயே

சமர்ப்பித்திருந்தார். ஆயினும் மொழியின் நாமம் இவரின் புனைபெயரிலேயே வழங்கலாயிற்று. ரஷ்ய, போலந்து, ஹீப்ரூ, யிட்டிஸ், ஆங்கிலம், பிரெஞ்சு, ஜேர்மன், கிரேக்கம் மற்றும் இலத்தீன் ஆகிய மொழிகளில் புலமை பெற்றிருந்த ஜமென்ஹோஃப் எஸ்பெறென்ரோ மொழியை நிர்மாணித்த போது வயது வெறும் பதினைந்து! ஒரு பொது மொழியை என்ன இலட்சியத்திற்காக உருவாக்கினாரோ அதேபோன்ற இலட்சியத்துக்காக உலகமதம் என்ற கருத்தில் மனித இனத்தின் உறுப்பினர் – Homaranismo என்ற ஒரு மதத்தையும் பின்னாளில் தோற்றுவித்தார். ஆனால் இவரின் மொழி ஏற்றுக்கொள்ளப்பட்ட அளவுக்கு இவரின் மதம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

## இலக்கணம் (Gramatiko)

1) எஸ்பெறென்ரோவில் 28 எழுத்துகள் (letero). இவை இலத்தீனிய வரி வடிவங்கள். உயிரெழுத்துகள் A, E, I, O, U – 5. ஆனால், Q,W, X, Y ஆகிய நான்கு எழுத்துகளும் இல்லை. மாறாக C, G, H, J, S, U ஆகிய எழுத்துகளுக்கு இரண்டு வடிவங்கள் உள்ளன. ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வோர் ஒலிதான்.

2) எஸ்பெறென்ரோ வளர்ந்து வாழ்ந்துவரும் ஒரு மொழி. இது உருவாக்கப்பட்டபோது 931 அடிச்சொற்களைக் கொண்டிருந்தது. இது இப்போது 20,000 அடிச்சொற்களைக் கொண்டிருக்கிறது. ஜெமென்கோஃப் உண்டாக்கியதைக் கொண்டு இன்று 25,000 சொற்களை உடைய வளமான மொழியாகக் கூர்ப்பு அடைந்திருக்கிறது. இது தமிழ் போன்று ஒட்டுநிலை மொழியாக அமைக்கப்பட்டதால் சொற்கள் பெருகிக்கொண்டே போகும். எஸ்பெறென்ரோ, இலத்தீன், கிரேக்கம், ரஷ்யன், இத்தாலியம், பிரெஞ்சு, அரபு, ஆங்கிலம், யப்பானியம் மற்றும் ஸ்லாவிய மொழிச்சொற்களை உள்ளடக்கி அமைக்கப்பட்டுள்ளது.

a) பெரும்பாலான எஸ்பெறென்ரோ சொற்கள்(vorto) தனிச்சொற்கள். இவை அடிச்சொற்களையும் விகுதிகளையும் கொண்டிருக்கும். அடிச்சொல்லுக்குச் சேர்க்கப்படும் விகுதிகளைப் பொறுத்து இலக்கணத் தொழில் மாறுகிறது. அடிச்சொல்லுடன் "o" சேர்க்கப் படுமானால் பெயர்ச்சொல்லாகவும் "i" சேர்க்கப்படும்போது வினைச்சொல்லாகவும் ஆகிறது.

அடிச்சொல் – Parol, விகுதிகள் –– o,i,a,e,j

Parol + o –– Parolo பெயர்ச்சொல் – பேச்சு (வார்த்தை)
Parol + i –– Paroli வினைச்சொல் – பேசு (கதை)
Parol + a –– Parola பெயரடை – வாய்மூலமான
Parol + e –– Parole வினையடை – வாய்மூலமாக
Parol + j –– Parolej பெயர்ச்சொல் – பன்மை – பேச்சுக்கள் (வார்த்தைகள்)

| பெயர்ச்சொல் | வினைச்சொல் | பெயரடை | வினையடை |
|---|---|---|---|
| Amo அன்பு | mangi சாப்பிடுதல் | bela அழகான | rapide விரைவாக |
| Patrino தாய் | trinki குடித்தல் | bona நல்ல | bone நன்றாக |
| Birdo பறவை | skribi எழுதுதல் | nova புதிய | ree மீண்டும் |
| Hundo நாய் | vidi பார்த்தல் | blua நீலமான | bele அழகாக |
| Libro புத்தகம் | lerni படித்தல் | lasta கடைசி | alte உயர்வாக |

### விகுதிகள்

| பெயர்ச்சொல் | வினைச்சொல் | பெயரடை | வினையடை |
|---|---|---|---|
| -o | - i | - a | - e |

b) வினைகள் ('j') இல் முடிகின்றன. ஒவ்வொரு காலப்பிரிவுக்கும் ஒவ்வொரு விகுதி. விகுதியானது எழுவாய்கள் மாறும்போது மாறுவது கிடையாது.

c) இவ்வாறே பன்மை (j) பெண்பால் (ino) ஆக்கம், வினாவாக்கம் எதிர்மறை(ne) செயப்படுபொருள்(n), இடைச்சொற்களுக்கான பொது இலக்கண நியதிகள் உள்ளன. எஸ்பெறென்ரோ மொழியில் இலக்கணப் புறநடைகள் கிடையா.

இன்று பரவலாக மொழிவிரும்பிகளால் அறியப்பட்ட இம்மொழி, மற்றெந்த மொழியையும் விட மிகவும் இலகுவான மொழி. "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவ தெங்கும் காணோம்" எனப் பாரதி மொழிப்பற்றில் உணர்வூட்டிச்சென்றது அன்று! ஆனால் "பாரிலுள்ள மொழிகளிலே படிப்பதற்கு எஸ்பெறென்ரோ மொழி போல் எளிதான தெங்கும் காணோம்" எனச் சொல்லித் திரிவர் எஸ்பெறென்ரோ கற்பவர் இன்று! அது பொய் ஆகாது. ஐந்து கண்டங்களிலுள்ள நூற்று இருபது நாடுகளில் சுமார் மூன்று மில்லியன் மக்களால் பேசப்படுகிற, பலநாட்டவர்களின் துணைமொழியாக ஜமென் ஹோப் (Zamenhof) இன் மொழி விளங்குகின்றது.

| Ami நேசித்தல் | | |
|---|---|---|
| **நிகழ்காலம்** | **இறந்தகாலம்** | **எதிர்காலம்** |
| Mi amas நேசிக்கிறேன் | Mi amis நேசித்தேன் | Mi amos நேசிப்பேன் |
| Vi amas நேசிக்கிறாய் | Vi amis நேசித்தாய் | Vi amos நேசிப்பாய் |
| Li amas நேசிக்கிறான் | Li amis நேசித்தான் | Li amos நேசிப்பான் |
| Sxi amas நேசிக்கிறாள் | Sxi amis நேசித்தாள் | Sxi amos நேசிப்பாள் |
| Gxi amas நேசிக்கிறது | Gxi amis நேசித்தது | Gxi amos நேசிக்கும் |
| Ni amas நேசிக்கிறோம் | Ni amis நேசித்தோம் | Ni amos நேசிப்போம் |
| Vi amas நேசிக்கிறீர்கள் | Vi amis நேசித்தீர்கள் | Vi amos நேசிப்பீர்கள் |
| Ili amas நேசிக்கிறார்கள் | Ili amis நேசித்தார்கள் | Ili amos நேசிப்பார்கள் |

| விகுதிகள் | | |
|---|---|---|
| **நிகழ்காலம்** | **இறந்தகாலம்** | **எதிர்காலம்** |
| -as | -is | -os |

ஐக்கிய நாடுகள் சபை, உலக நாடுகளில் கழகங்கள் அமைவதற்கு 1954 ஆம் ஆண்டு அங்கீகாரம் வழங்கியிருக்கிறது. இன்று 90–க்கும் மேற்பட்ட நாடுகளின் 2200 நகரங்களில் எஸ்பெறென்ரோ வளர்ச்சிக் கழகங்கள் இருக்கின்றன. அமெரிக்கா, அவுஸ்திரேலியா, யப்பான் மற்றும் ஐரோப்பாவில் வருடந்தோறும் 2500 – 4000 பேர் கலந்துகொள்ளும் 200–க்கும் அதிகமான மொழியாய்வு சந்திப்புக்கள் இடம்பெறு கின்றன. வெவ்வேறு தாய்மொழிகளைப் பேசுகின்ற பல்வேறு நாட்டு மக்கள் மொழிப்பேதம் இன்றி சுதந்திரமாகவும் சந்தோஷமாகவும் சிநேகிதமாக உறவாடும் மொழி எஸ்பெறென்ரோ.

# ELECTROPALATOGRAPHIC CHARACTERISTICS OF SOME TAMIL CONSONANTS

HELEN FRASER

## Introduction

In this paper I would like to give a description of the characteristics of some of the consonant sounds of Tamil as revealed by the phonetic technique of electropalatography, which measures the changing pattern of contact between the tongue and the roof of the mouth during the articulation of speech sounds.

Tamil of course is spoken widely throughout southern India and Sri Lanka, as well as in Malaysia, Singapore and other countries. It shows considerable variation in regional and social dialects; there are also significant differences in pronunciation depending on style ( formal or casual) - though whether these differences are greater than between formal and casual speech in other languages is not yet clear.

Electropalatography is a technique which is not suited to large studies of numerous speakers. In this study, one speaker was used: a 26 year-old speaker of a Brahmin variety of Madras Tamil. The extent to which the observations made hold true for other varieties of Tamil must await further research.

## The Tamil Sound System

The Tamil writing system represents 18 consonants and 12 vowels. To this date, no final agreement has been reached as to how many separate phonemes (distinctive sounds which make a difference to the meaning of words) are represented

by these letters, singly and in combination (Chimes 1993 gives a good survey of positions that have been taken). It seems likely that there are significant differences between dialects and styles. It is hoped that the data presented in this paper will shed further light of this question, at least as far as the dialect of this particular speaker is concerned.

Despite the lack of a clear and complete picture of the Tamil sound system, a partial preliminary characterisation can be given as follows, as a basis for further discussion.

Consonants are produced at five places of articulation: labial, dental / alveolar, palatal, retroflex (post-alveolar) and velar.

At each of these places of articulation, there is both a stop and a nasal.

As well the consonant system includes two laterals, alveolar and retroflex; an alveolar tap/ trill, a postalveolar fricative, at least one affricate, and a palatal and labiovelar glide, and a postalveolar approximant.

Tamil is generally described as a language with no voice contrast, but stops can be written singly or doubly, with the difference in pronunciation manifesting partly as a difference in voicing though there has been some debate as to how to characterise these single double consonants. More will be said about this below.

As for vowels, there are ten 'pure' vowels, or monophthongs, arranged as five short long (or single double) pairs, and two diphthongs.

It is interesting to note that this sound system is rather similar to that of the Australian Aboriginal languages, although the latter generally do not have even as much of a voice contrast as Tamil does. It has been suggested in the past that there might be a genetic connection between the Dravidian and the Australian language families (Caldwell 1856), mainly on the basis of this similarity in their sound systems. However, it is also true that links have been proposed between Dravidian and numerous other languages (cf. Zvelebil 1985) over the last century - presumably because the true history of the Dravidian language family is unknown
with the Dravidian - Australian connection being one of the weaker theories.[2]

Nevertheless, it is interesting from a phonetic point of view to compare the articulation of Tamil sounds with corresponding sounds in Australian and other langu (cf. Butcher, in prep), and some attempt will be made to do this in what follows.

## Previous research on Tamil phonetics

Previous research on the phonetics and phonology of Tamil has not been extensive. Firth (1934) gives an impressionistic, though in many cases highly accurate,

description of its phonemes and their principal allophones. Two native speakers have done instrumental work for PhD dissertations in the UK (Balasubramanian 1972; Marthandan 1983). More recently, another native speaker, Christdas (1988), has done a PhD dissertation in the US looking at the phonology of Tamil from a modern, non-linear perspective. This includes virtually no phonetic description. Several smaller scale studies of vaious aspects of Tamil pronunciation have also been carried out (for example: Andronov 1975, Sounderaj 1986, Ucida 1988, Vaidyanathan and Lisker 1972, Svarny and Zvelebil 1955, Chimes 1993).

## Electropalatography

In the present study, I have used the technique of electropalatography (EPG), in which a false palate is constructed for the subject. This palate has electrodes embedded in its surface, which are connected by wires which come out of the corners of the mouth, through a multiplexer, to a computer. The computer display shows a stylised picture of the palate, with the top representing the front of the mouth, the bottom the back and left and right sides of the image the left and right sides of the palate. When any electrode is contacted by the tongue, this is shown on the screen by a zero; uncontacted electrodes are represented by a dot. The image is updated every 10 milliseconds, and thus gives a quasi-continuous record of the pattern of contacts the tongue makes with the roof of the mouth during speech with a series of snapshots of the palate during production of the sound. For further details on this technique, see Hardcastle et al (1989).

Please bear in mind that the stylised representation of the palate can be misleading, in that it appears that the rows of electrodes are all evenly spaced; in fact the front four rows are closer together than the back four. Rows 1-4 represent the alveolar region; Rows 5-7 the palatal region and Row 8 the velar region of the subject's palate. Figure 1 gives some information about the palate and its use, and the position of the electrodes in relation to the contours of this particular speaker's mouth.

So far as I am aware, this is the first EPG study of Tamil, though there has been some investigation (Svarny and Zvelebil 1955, Balasubramanian 1972, 1982) of Tamil sounds using the technique of static palatograph, which is similar in concept to EPG though rather more limited in that one cannot see the sounds as they unfold through time. It is this ability to observe the dynamic aspect of speech sounds which gives EPG its major advantage over static palatography. One major advantage of static palatography however is that it also gives information about the region of the tongue that has made contact with the palate; EPG does not give this information, so it will not be available in this study.

## Method

In this study, various types of data were collected from the speaker, all formed into word lists, which are shown in Appendix 1.

1. The speaker was asked to pronounce each letter of Tamil, both single and double, in a nonsense word, with the low vowel 'a' on either side. The aim was to provide a reference description of each sound in a neutral context.

2. Two seperate lists of real words were also recorded. The aim was to find examples of each consonant in as many different contexts as possible.

3. In some cases where the formal and casual pronunciation of words was known to differ markedly, the speaker was asked to provide a casual pronunciation (or at least as casual as possible, given the circumstance of recording) to compare with the formal pronunciation. Words produced with a casual pronunciation are numbered with 'c'. For reasons of space, only limited comment is made on the relationship between casual and formal pronunciation in this paper, however.

## Results

In this section I will describe the characteristics of each consonant for which observation were made. For each consonant I will discuss current observations, in the light of statements which have been made previously about its articulation. I have organised the discussion according to the letter being produced, rather than according to a phonemic analysis. This has allowed me to discuss issues of phonological analysis without prejudging them by the labels used. In headings, I have classified sounds with commonly used rough phonetic descriptions in the headings, and suggested more accurate phonetic descriptions in the text.

Examples of the EPG printout for selected words are shown in Appendix 2, in numerical order. Words which are represented there have their numbers starred whenever they are mentioned.

The nature of EPG means that most information is gained about the sounds which involve contact of the tongue with the roof of the mouth. There are various ways of quantifying the palate patterns. In the present study I have looked at the following dimensions of articulation:

* Row(s) of main closure or stricture through time, specifying Row(s) of first contact and release separately if necessary;

Any secondary strictures evident;

Duration of main stricture.

## Dental and Alveolar Consonants

### த் double

This letter when doubled is generally articulated as a long voiceless dental stop, with a forceful articulation. The EPG pattern it makes is generally quite consistent, with little allophonic or other variation. Initial closure is made in Row 1 of the palate, the contact then broadens to include Row 2 and sometimes

part or all of Row 3, and the closure is then released through Row 1 again. This articulation is thus rather symmetrical, in that its release is like a reverse of its formation; some of the sounds to be discussed below do not share this characteristic.

It seems that contact is made initially with the back or tips of the upper teeth (this is usually quite obviously visually), and it is through maintaining a firm closure with the teeth that the front of the alveolar ridge is contacted. Accordingly this sound can be considered accurately described by the label 'dental'.

This pattern is very similar to that found Butcher in the Australian language Arrernte, which is similar to Tamil in having a contrast between two laminal consonants, the palatal and the dental.

The duration of closure is between 100 and 200 milliseconds in these citation forms, with longer closures in short words and after short vowels, and shorter closures in polysyllabic words and after long vowels.

### த் single

This letter when single between vowels is articulated as a short weak dental consonant. It can be a voiced stop (as in 37, போனது, and 105*, பதம்), but commonly it is a fricative or even an approximant (eg. 8*, கைதி). In these cases, contact is always made in Row 1, but the channel formed here can be very broad. Of course, EPG does not show contact with the teeth, and it is likely that in cases of minimal Row 1 contact, the tongue is lightly touching the teeth. Duration of the sound is generally around 50 ms.

This type of pronunciation is very similar to the pronunciation of English 'th' in words like 'other' (cf, Svarny and Zvelebil 1955:381). From the current data, it appears that fricative/approximant pronunciation is more likely in the environment of front vowels, but it is not clear how well this generalisation would hold up in a larger sample of data.

This letter can also occur after its associated nasal, In this case it is always a voiced dental stop, with full closure.

### ந், ன்

The Tamil spelling system distinguishes two n-sounds, traditionally thought of as dental and alveolar It seems clear that earlier stages of the language differentiated these two sounds, but there is considerable evidence that they have merged in the contemporary language, and the distinction is no longer one of pronunciation, but only of spelling (Balasubramanian 1982). In fact there are very few opportunities for the two sounds to contrast, as occurs word finally, before ற் and a few other consonants (never த் ), very rarely between vowels, either single or double. This suggests that the sounds, though represented differently in the spelling were never fully contrastive in the sound system (cf. the situation with the two 'r' sounds, below).

In general, the current data show that ந் before த் is always dental, articulated in Rows 1-2 with the cluster showing an overall pattern identical to that of double த் above (as expected, since the only difference between them is in voicing and velum position, neither of which have any effect on EPG pattern.

Initial is always articulated in Rows 1-2 often with considerable involvement of Row 3, and released

through Row 1, suggesting that it is dental in this position, also. The only exception is in 143, நீளம் in which the articulation is formed in Rows 3-4, and moves forward to Rows 2-3; this looks much more like a retroflex articulation (see below), and I assume it was an error in pronunciation, although there may be some systematic reason for it.

Final is usually articulated with a closure starting in Row 2 and broadening out to Rows 2-3, often with considerable involvement of Rows 1 and/or 4. However, several words (eg. 7, வைப்ப்பேன்) show this sound produced mainly in Rows 1-2, and looking much more dental than alveolar -though the fact that the articulation often starts in Row 2 rather than Row 1 distinguishes many of these cases from the true dentals.

Between vowels, ன் is rather variable. Words like 115* ஞானம், show closure in Rows 2-3, usually released through 2. Others like 17, மீனாட்சி show closure

in Rows 1-2, released through Row 2. Again the release pattern distinguishes these form the dentals.

Words 114*, மநம் and 116*, மனம், which were intended to show a direct contrast between these two letters succeeded only in producing an anomalous ticulation which looks more like a retroflex than either a dental or an alveolar. Both show articulation in Rows 3-4, moving forward to 2-3.

It can be agreed then that the historical distinction in pronunciation between these two letters has been eroded. They now probably do represent a single phoneme with several allophones, as suggested by Balasubramanian, though the situation in my data is a little more variable than was the case in Balasubramanian's data, where a rather clear conditioning factor was found, with the dentai nasal before the dental stop, and the alveolar nasal in initial, intervocalic and final positions. It is possible that some of this variability could be accounted for by 'care' of articulation, as suggested by Svarny and Zvelebil (1955).

### ல்

This letter is usually pronounced with a definite alveolar closure in Rows 2-3, quite distinct form the dental articulations described above for the other sounds in this place category. However, it does appear (in 122, நல்ல and 145, இல்லை) with closure in rows 1-2. There is no obvious conditioning factor here. No cases of this letter show any constriction in the palatal or velar region as is often found in English '1', confirming the auditory impression that the Tamil alveolar & is pronounced very clear (ie. unvelarised).

### ர்/ற் single

This is another case where Tamil historically made a distinction between a trill and tap which is now losing its force in speech, though it is still maintained in the spelling the distinction between 'big-r' and 'little-r' (cf. Balasubramanian 1983:91). In this case however, the two letters can occur in the same environment (intervocalic) and can make a difference to the meaning of the word. It thus appears to represent more of a true merger of phonemes than is the case for the two 'n' sounds.

ர் is by far the more common letter in spelling. In this data it is generally pronounced as a short, weak tap in Row 2, or sometimes Row 3. In many cases there is no complete closure registered, and if there is, it is generally of 1020 milliseconds' duration. On the other hand, several words (eg. 146. வரம் ) show steady closures of 50-70 milliseconds. Further analysis is needed to determine what factor if any conditions this difference, though once again some factor of 'care' in pronunciation may be relevant. occurs as a trill in 112, ரத்தம் .

Two words spelled with were included in the list to explore the difference between and . one word spelled with (176* ) was indeed produced with a trill, but the other (175, 4) was not. Again this data supports the conclusion of Balasubramanian (1983) that the distinction between these letters is lost, and that both are commonly pronounced as a tap. and both occasionally pronounced as a trill. Trilled probably occurs more commonly in careful speech (such as these wordlists) and where one member of a minimal pair is being consciously differentiated from the other.

### ற் double

As a 'hard' consonant, changes considerably in pronunciation when doubled, in formal speech to a retroflex affricate, and in casual pronunciation to a stop. Only one clear example of double ற் was included in this data (151*, நெற்றி) and it was produced in the formal style. It shows closure in Row 2, with considerable

